தேசுபெறு முலகறிய வறிவித்த தேசிக
சிறுதே ருருட்டி யருளே
திரைவாரி முத்தருறை மயிலாபு ரிக்கிறைவ
சிறுதே ருருட்டி யருளே. (8)

முந்துதொகை யெண்பெயர் முறைபிறப் புருவளவு
முதலந்த மிடைபோ லிகள்
மொழிபுணரப் புறத்தெழுந் தியல்புதனி மைத்தோர்
மொழியைந்து பாலி ருதிணை
யுந்தனையு மூன்றிடத் தும்வழக் குச்செய்யு
ளோர்குறிப் பால்வெளி யிதனால்
ஓதுதல் சொலதுவிற் குசாற்றறி சொல்பெயர்
வினைகளுட னிடையுரிசொ ஞன்காம்
ஐந்திணை யகம்புறமு திரைகோட லாதியா
மகவைபொ ருளலங் காரமு
மணியிரண் டாறுருப் பாயிரண் டாகுமயற்
பவ்வைந் திலக்க ணமெனுஞ்
செந்தமிழ்க் குறுமுனி வணங்குகுரு தேசிக
சிறுதே ருருட்டி யருளே
திரைவாரி முத்தருறை மயிலாபு ரிக்கிறைவ
சிறுதே ருருட்டி யருளே. (9)

புயலைநிகர் செங்கையினர் பூம்பாவை யூரவர்நின்
புகழ்மருவு பிள்ளைத் தமிழால்
புகலெனத் தம்மமுத வாக்கினு லொருசீர்
புகன்றதுன் வாக்க தாக
நயமதுர கவிபொழியு நிபுணதாண் டவராய
நாவல னிசைந்து பாடி
நான்மறைசொல் வாணர்தமிழ் வாணர்நிறை தொண்டைவள
நன்னுட்டு ளோர்கள் மெச்ச
இயல்பறுச காத்தமோ ராயிரத் தாறுநூற்
றெழுபத் திடனெட் டாண்டினில்
வெய்துபவ வருடமா வணியுத்தி ரட்டாதி
யிலின்பு டனரங் கேற்றிடுஞ்
செயமிலகு தமிழ்கொண்ட சிங்கார வேலவ
சிறுதே ருருட்டி யருளே
திரைவாரி முத்தருறை மயிலாபு ரிக்கிறைவ
சிறுதே ருருட்டி யருளே. (10)

**சிறுதேர்ப் பருவம் முற்றிற்று.**

**திருமயிலைப் பிள்ளைத் தமிழ் முற்றும்.**

---

# திருமயிலைக் கோவை

## (திருமயிலைச் சிங்காரவேலர் கோவை)

(அம்பலவாணக் கவிராயரால் இயற்றப்பெற்றது.)

வேலு மயிலுந் துணை.

# திருமயிலைக் கோவை

### விநாயகர் வணக்கம்

பெருகா ரணம்புகழ் சிங்கார வேலர் பெருமைசொல்ல
வருகாதல் சேரும் பலன்மேவி வண்டு மலர்ப்பசுந்தேன்
பருகாவி சூழு மயிலைநற் கோவை படர்வதற்கு
முருகா ரொருகொம்பிற் கூத்தாடும் பேரத்தி முன்னிற்குமே. (1)

### அவையடக்கம்

வியலா ரொளிர்மணிக் கோவையுங் கானின் மிகப்படருஞ்
செயலாருங் கோவையுங் கோவையென் றேபுவி செப்புதல்போல்
மயலான் தின்றிப் பலநூலுங் கற்றவர் வாய்மொழியால்
இயல்கோவை தானுமென் கோவையுங் கோவை யெனத்தகுமே.
(2)

## நூல்

## 1. களவியல்.

### கைக்கிளை

#### காட்சி

நீர்கொண்ட கொண்டல் செழுந்தா மரைகுமிழ் நீலமலர்
ஏர்கொண்ட கோங்குசெவ் வாம்பல்பைங் காந்த ளிவைமலர்ந்து
சீர்கொண்ட சுந்தர சிங்கார வேலர் திருமயிலைக்
கார்கொண்ட காவி லொருகாம வல்லியென் கண்ணுற்றதே. (1)

#### ஐயம்

காணிட மாமயிற் சிங்கார வேலன் கவின்மயிலைத்
தேனிட மாமல ரோபுன லோபணி சேரிடமோ
வானிட மோமலர் மாலிகை யோமன் மதனிடமோ
மானிட மோவல்லி யோவென்ன நின்றவிம் மானிடமே. (2)

#### துணிவு

வாரணி கொங்கை மதவா ரணங்குற வள்ளிபங்கன்
பூரணி மாமகன் சிங்கார வேலன் புகழ்மயிலை
ஏரணி பூவடி செங்காவி மைக்கண் ணியம்புதல்போல்
தாரணி மானெனுங் காரணி வார்குழற் றாரணியே. (3)

### குறிப்பறிதல்

அனையும் பிதாவு மனையாள் மயிலை யருட்குமரன்
புனையும் கடம்பணி சிங்கார வேலன் பொலன்கிரிவாய்
எனையும் பராகச் சிவனுக வையுற வின்றிப்பலகால்
நினையும் படிசெயு மம்மாதர் நீல நிகர்விழியே. (4)

### இதுவும் அது

வார்க்கட லுக முகத்தான் கிரவுஞ்ச வஞ்சனஞ்சப்
போர்க்கட னுடும படையான் மயிலைப் புனிதனருட்
சீர்க்கட லாகிய சிங்கார வேலன் சிலம்பின்மினனுள்
கார்க்கட லானகண் பாற்கட லாம்வகை காட்டியதே. (5)

கைக்கிளை முற்றிற்று.

---

## தலைவிப் புணர்ச்சி.

### இரந்து பின்னிற்றற்கு எண்ணல்

நீர்தந்த சேறறினை,நீரே கழுவுமந நீர்மையைப்போல்
நீர்தநத காமக் கனலைத தவிர்ப்பவர் நீரெனவே
வார்தந்த பூண்முலைக் கோதநெஞ சேசெலவ மாமயிலைத்
தார்தந்த மார்பினர் சிங்கார வேலர் தடங்கிரிக்கே. (6)

### இரந்து பின்னிற்றல்

கான்மயி லாகி யுமைபூசை செய்த கவினமயிலைத்
தேனமுகை விண்டவர் சிங்கார வேலன் சிலம்பினெளி
யேன்மிசை யம்பிரண் டேவ யிரங்கு மியன்மறந்தைம்
பான்முடி சாய்த்துப் பதம்பார்த்து நிற்பதென் பைந்தொடியே. (7)

### முன்னிலை யாக்கல்

பாரும்விண் ணும்புகழ் சிங்கார வேலன் பயினமயிலை
சூருமின பாவை யுறுபண்ணை நீமறந் தாசுமின்றிச்
சேரும் வித்தார மதுரமும் பேசிலைச் சித்திரமே
நேருமென னுநின்ற சித்திர மேதும் நிகழ்த்துகவே. (8)

### வண்டோச்சி மருங்கணைதல்

மருவார் குவளையன் சிங்கார வேலன மயிலையன்னுன்
நெடுவார் குழலுறை வண்டீர்கண டீரிடை நேர்மையெண்ணீர்
படுகுழை யாகிய வண்டர்கள் சாலப் பழகிடினும்
நடுவே பொல்லாங்கு செயுந்திறங் கண்டனென் நானிலத்தே. (9)

### மெய்தொட்டுப் பயிறல்

மெய்த்தே வரும்பணி சிங்கார வேலன் விரவுசெந்நெல்
செய்ததேன் பெருகு மயிலையி னுனமுனஞ் செய்தவத்தால்
நெய்த்தேன் குழலு மிடுபணி யாரமும் நேர்திருத்தி
வைத்தே மனவிர தம்நிறை வேற்றினன் வாணுதலே. (10)

### பொய் பாராட்டல்

மணிவாய்த்த திணைபுயன சிங்கார வேலன் மயிலைமின்னே
அணிவாய்த்த நினமுகச் செவ்விகண் டேங்கி யகம்வருந்திப்
பணிவாய்க கிடந்து தவமுயன் மாமதி பாரறியத்
தணிவாய்ச் சுழன்றிர வெய்திமெய் தேய்ந்து தளர்கின்றதே. (11)

### இடம்பெற்றுத் தழால்

முதியா ரறிவி னுறைஞான வாரிதி மூவிரண்டு
மதியாகு மானனன் சிங்கார வேலன் மயிலைவெற்பில்
விதியாக முற்றிய தானமும் வாய்த்து மேவுமின்னாள்
கதியாகு நல்லமு தந்தரு சொர்க்கநங் கைவசமே. (12)

### வழிபாடு மறுத்தல்

துடியேற்ற செங்கைக் கபாலீசர் மைந்தன சுரன ரவிண்ணில்
குடியேற்றி வைத்தவன் சிங்கார வேலன் குறத்தியெனும்
வடியேற்ற கண்ணி மணாளன மயிலை மயிலைமணிக்
கொடியேற்ற மாகுந் திருநாண மருவக குறித்தருளே. (13)

### இடையூறு கிளத்தல்

அபபுற்ற வாவி புடைசூழ் மயிலை யனபவளம்
ஒப்புற்ற மேனியன் சிஙகார வேல னுயர்வரையில்
செபபுத் தனத்தைப் புதையாய்ப புதைத்தனை சேலைமுற்றும்
இப்பெற்றி செய்குவ தென்னுகு மங்கைக் கியம்புகவே. (14)

### நீடு நினைந்து இரங்கல்

மருமொய்த்த வெட்சியன் சிங்கார வேலன் மயிலைவெற்பில்
உருவத் தொடுமத் திரநா ணெனக்காலு முறுவ திந்தப்
பருவத் தருவிற் படாகாம வல்லியின் பாங்கெய்தலான்
நிருமித்த வண்ணத்தி னிலலாம லேக நெகிழ்ந்ததுவே. (15)

### மறுத்தெதிர் கோடல்

சாலி சொரிந்த தரள நிலாவு தடமயிலை
மோலி புனைந்தருள் சிங்கார வேலனை முன்னலர்போல்
வேலி பிரிநத பயிர்போ லுயிரு மெலிந்திடவென்
பாலி னிருந்த பெருநா ணுருகிப் படர்கின்றதே. (16)

### வறிது நகைதோற்றல்

சித்தம் பலவழி செலலாம லாகமச் செம்பொருளை
நித்தம் பகர்ந்தருள் சிங்கார வேலவர் நீண்மயிலைச்
சத்தம் பயிலளி சூழ்தோகை யார்முகந் தாமரைவாய்
முத்தம் பவளமென் றெண்ணவெண் மூரல் முளைத்ததுவே. (17)

### முறுவற் குறிப்பு உணர்த்தல்

பொய்ச்சங்கந் தீர்த்தருள் சிங்கார வேலன் புனைமயிலோன்
செய்ச்சங்கம் பான்மதி போல வுலாவுந் திருமயிலைக்
கைச்சங்க மின்னிடை மானுள வதன கமலமிசை
மெய்ச்சங்க மிங்குற முத்த நிலாவிது மேவியதே. (18)

### முயங்குதல் உறுத்தல்

கொங்கார் மலர்த்தண் டலைசூழ் மயிலைக் குமரகனெனிர்
சிங்கார வேலன் மகவான் பணிபவன் சேரிமையக்
கங்கா நதியைப் பயோததி வந்து கலந்ததொக்கும்
செங்காவி யங்கண் மடமானை நானின்று சேர்ந்ததுவே. (19)

### புணர்ச்சியின் மகிழ்தல்

தாய்க்கே யிணைநல்ல தம்பிக்குத் தம்பி தருமநிதி
ஆய்த்தேர் குமர குருநாத பூபதி யன்புபுரி
சேய்த்தே மயிலையிற் சிங்கார வேலன் சிலம்புமின்னாள்
வாய்த்தேனை யுண்டுளம் வாய்த்தேனை யாரொப்பர் மாநிலத்தே.
(20)

### புகழ்தல்

வேரித் திருமலர்ச் சிங்கார வேலர் வியன்மயிலை
மாரித் தடமுகில் சூழ்நந்தி மால்வரை மான்முலைபோல்
பாரித் திறுகிப் புளகித் திளகிப் பணைத்தெழுந்து
பூரித் தலுமுனக் குண்டோ வமுதப் புதுக்குடமே. (21)

### ஏற்புற வணிதல்

மேடையுஞ் சோலையுஞ் சூழ்மா மயிலையன் மெய்யமுதும்
மாடையு மன்னவன் சிங்கார வேலன் வரையணங்கே
ஓடையும் பூவுங்கல் லாரமுத் தோடு மொலிசெய்வண்டும்
ஆடையு மெய்யணி யாவு முன்போல வணிந்தனமே. (22)

தலைவிப் புணர்ச்சி முற்றிற்று.

---

## வன்புறை.

### அணிந்துழி நாணியது அறிந்து தெளிவித்தல்

மாலன்ன வாகனன் போற்றும் மயிலையன் வள்ளியம்மை
சேலன்ன கண்மகிழ் சிங்கார வேலன் சிலம்பினிலெம்
பாலன்ன மேயிட்ட பொற்கலங் காணினுன் பாங்கமைநீ
மேலன் னவரு மிசைவா ருளமஞ்சி வெள்கலையே. (23)

### இதுவும் அது

சேந்தன் மயிலையிற் சிங்கார வேலன செழுங்கிரியில்
கானதனின் வணடுமிடைப பாலதெய் யாடையுங் கார்ப்புயன்மேல்
ஏந்திய தாரையுஞ் செப்பார் பணியு மியைந்த வண்ணம்
போந்துகண் டாரைய மெய்தார்வெள் கேனுளம் பொற்கொடியே. (24)

### பெருநயப்பு உரைத்தல்

மாகத்தர் போற்றிய சிங்கார வேலன மயிலுகந்தோன்
ஆகத் துயிருக் கிறையோன மயிலையின ளுள்முகம்போல்
பூகத்து மீதம் புயம்பூத் தமுதம் பொருந்தி யன்பால்
தாகத்தைத் தீர்ப்பதும் வணடேயுண் டேகணட தன்மைசொல்லே. (25)

### தெய்வத்திறம் பேசல்

பொய்த்தெய்வ மாகிய வானோர்க் கடிமை புகாமலருள்
வைத்தென்னை யாண்டவன சிங்கார வேலன் மயிலைவெற்பில்
மெய்த்தெய்வந தந்த புணர்பபினை யாவர் விலக்குகிற்பார்
எய்த்துள்ளம் வாடி வருநதலென னேமல ரேந்திழையே. (26)

### பிரியேன் என்றல்

வள்ளிக் கொடிபடர்ந் தோங்கிய தாரு மயிலையுள்ளோர்
கொள்ளச் சிறபபருள் சிங்கார வேலன் குலவரைமேல்
அள்ளற் கமைநத வழகணங் கேயென் னருந்துணையே
உள்ளத் தயர்வு கொள்ளேல பிரியேனுனை யுணமையிதே. (27)

### இதுவும் அது

பசிக்கா ரமுத முயிர்க்குச்சஞ சீவினி பாரமயில
நிசிக்கா தவம்வறு மைக்கோர் நிதியெனு நின்னையென்றும்
சசிக்கோ முகத்தி வருநதேல பிரிகிலன் றணமயிலைச்
சுசிக்கா தவனருள் சிங்கார வேலன் சுடர்வரைக்கே. (28)

### பிரிந்து வருகென்றல்

வானினுஞ் சீரருள் சிங்கார வேலன் மயிலைவெற்பில்
தேனினும் பாலினும் யாழினும் வாய்மொழித் தேமளித்த
மானினு நீள்விழி யாய்விளை யாடுதி வல்விரைந்தே
நானினி யம்மலைச் சாரலசென றிங்ஙன் நண்ணுவனே. (29)

### இடம் அணித்து என்றல்

என்னே மயங்கி மனநதளா வெய்த லிரவியன்ன
பொன்னேமி யான்பணி சிங்கார வேலர் புகழ்மயிலை
மின்னே நுஞ்சார லராமணிச் சோதி விரவியெம்மூர்
மன்னேர் படிக மணிமாட மாமணி மாடங்களே. (30)

### இதுவும் அது

கருங்காவி யங்கண் கலங்கினே யேலுள்ளங் கர்ண்மயிலைத்
தருங்காத லல்கிய சிங்கார வேலா சயிலநும்மூ
மருங்கார் கொடிக்கறி மேவிப படர்தர வாய்த்ததெம்மூர்
பெருங்காய மஞ்சள் பழம்புளி மாவினம் பெண்ணமுதே. (31)

### வன்புறை முற்றிற்று.

---

## தெளிதல்

சோதி மயிலையிற் சிங்கார வேலன் சுனைவரைமேல்
மாதித யங்கலங் கேலென்று தேற்றிய வாசகத்தை
நீதி யுடன்தெளிந் தேனைப பிரிகிலர் நேரிழைக்காய்ப்
பாதி பசந்தவர் போலன்பர் யாரென்ற பார்த்திபரே. (32)

### இதுவும் அது

பொன்மயி லாபுரிச் சிங்கார வேலர் பொலன்கிரிமேல்
என்மனந தன்னை மிகத்தேற்றி யாற்றி யெனக்குறுதி
நன்மையிங் கோதி யகன்றிடு மெய்யன்பா நான்வருந்த
வன்மைகொண் டங்குறை யார்வரு வார்சொன்ன வாய்மை
[கொண்டே. (33)

---

## பிரிந்துழி மகிழ்தல்.

### செல்லுங் கிழத்தி செலவுகண் டுளத்தொடு சொல்லல்

போராகும பூஞ்சிலைச் சிங்கார வேலர் புகழ்மயிலை
வாராருந் தாமரை சேதாம்ப லும்பல் வள்ளைமலர்
ஓராவி போலுமென் னீராவி மாத ருருமருவிச்
சீராகச் செல்லுத னேக்குனெஞ் சேகண் சிறந்திடவே. (34)

### பாகனொடு சொல்லல்

மற்புயன் சிங்கார வேலன் மயிலையின் மன்னியயாம்
முற்புறஞ் செய்த தவத்திடை யீடு முதியதவம்
பிற்புறஞ் செய்ததுந் தோன்ற நடந்துதன் பிற்புறம்பார்த்
துற்பல நோக்கி செலல்காண் வலவ வுவந்துநின்றே. (35)

### பிரிந்துழி மகிழ்தல் முற்றிற்று.

---

## பிரிந்துழிக் கலங்கல்

### ஆயவெள்ளம் வழிபடக் கண்டு அது மாயமோ என்றல்

சிந்தித்த தெய்வம் விழியெதிர் தோன்றத்தன் சீரடியார்
வந்தித்தல் போலெண்ணில் மாதரித் தோகையை வந்தித்தலால்
சந்தித்தல் பொய்மை யதோமெய்மை யோவளஞ் சார்மயிலைப்
புந்தித் தயாநிதி சிங்கார வேலர் பொருப்பிடத்தே. (36)

### வாயில் பெற்றுய்தல்

கருமைப புயலன்ன வெஞ்சூர னஞ்சக் கறுவிவென்ற
பெருமைப் புயாசலன் சிங்கார வேலன் பெருங்கிரிவாய்
இருசொற் கொருபொருள் போலே தனக்கு மிவட்குமுயிர்
ஒருமைத் தெனச்சொலு மிம்மாதர் பாங்கை யுறவுதந்தே. (37)

### பண்பு பாராட்டல்

மோகந் தவிர்த்தருள் சிங்கார வேலர் முதிர்ந்தசிவ
போகந் தழைமயி லாபுரி மாதிவ ளொண்ணிறம்போல
சோகந் தவிரத் தளிராது சோகஞ் சுடர்முகம்போல்
தாகந் தவிர வுதியாது பூரண சந்திரனே. (38)

### பயந்தோர் பழிச்சல்

அன்பா லெனக்கருள் சிங்கார வேல ரணிமயிலை
இன்பா ரமுதை மடவா ராசியை யீன்றெடுத்தோர்
மன்பாா புரந்து வளர்செல்வ மும்பெரு வாழ்வுமெய்தி
நன்பா லுகம்பல மன்னுக பூவி னலம்பெறவே. (39)

### கண்படை பெறாது கங்குல் நோதல்

சீற்றா பிறைநுதல் கூடிப பிரிந்தவச் சேண்மை கண்டோர்
நோற்றார் மயிலையிற் சிங்கார வேலனை நோக்கி நின்று
போற்றார்க ளினப மெனவே யனந்தலும் போனதந்த
மாற்றார்க ளின்ன லெனநீண் டிருண்டது வான்கங்குலே. (40)

பிரிந்துழிக் கலங்கல் முற்றிற்று.

---

## இடந்தலைப்பாடு.

### தந்த தெய்வம் தருமெனச் சேறல்

ஊழிற் பெருவலி யாவுள வென்னுமுன் னோருரையைச்
சூழிற் றருந்தெய்வ நெஞ்சே வருந்தலச் சூழலசெல்வாம்
காழிக் கவுணிய ரங்கம்பெண் ணாக்குங் கவின்மயிலைக்
கோழிக் கொடியினன சிங்கார வேலன் குலவரைக்கே. (41)

### முந்துறக் காணல்

கண்ணுக் கொளியு முயிருக் கறிவுங் கவிக்கிசையும்
விண்ணுக் கிரண்டு சுடரும் பிரிந்துபின் மேவுதல் போல
எண்ணிற் பெரும்புகழ் சிங்கார வேல ரெயின்மயிலைப்
பெண்ணுக் கரசி பிரிந்துமுன் போல்வரப் பெற்றனமே. (42)

முயங்கல்.

பந்தக் கரும மலமாயை தீர்த்துப பரிமயினமேல
வந்தக் கதியருள் சிங்கார வேலர் மயிலைவெற்பில்
சந்தக் களப முலைமலை மாதரார் தந்தநலம்
சிந்தைக்கு ணின்று தெவிட்டாம னித்தியந் தித்திக்குமே. (43)

புகழ்தல்

தருசொற் குயில்பயில் செந்தளிர் மாம்பொழிற் றண்மயிலைக்
குருசொற் பிரணவச் சிங்கார வேலன் குலகிரிமேல்
வருசொற் சசிமுகம் வேர்ப்ப வரம்பை வணங்கவிவள்
இருசொற்கம் போல வொருசொற்கம் பேரின்ப மீவதின்றே. (44)

உடன்புணர் ஆயத்து உய்த்தல்

கலைமுறை கற்ற பெரிய பராசரன் காதலர்க்கு
நிலையுப தேசஞ்செய் சிங்கார வேலர் நிதிமயிலை
தலைமுத லங்க முறுமுடற் கோருயிர் சார்வதுபோல்
முலைமட மங்கைய ராயத்து நீசென்று மன்னுகவே. (45)

இடந்தலைப்பாடு முற்றிற்று.

---

பாங்கற் கூட்டம்.

தலைவன் பாங்கனைச் சார்தல்

சீரானை வேந்தனைச் சிங்கார வேலனைச் சேர்மயிலை
ஊரானை மாமயி லூர்வானை வாழ்த்துமென் னுள்ளமயல்
பாரானை நண்புறு பார்ப்பானைச் சார்ந்திப் பரிசுரைத்தால்
வாரானை வந்தவன் சேனைத் தலைவியை மன்னுவனே. (46)

பாங்கன் தலைவனை உற்று வினவுதல்

தேராது நண்புகொண் டோர்செயுஞ் செய்கை திறம்பினையோ
சோரா தடைக்கலஞ் சேர்மன்னர் நாடுறச் சூழ்ந்தனையோ
சீரார் மயிலையிற் சிங்கார வேலர் சிலம்பண்ணலே
போராரு நின்புய வாட்டமென் காட்டப் புகுந்ததுவே. (47)

இதுவும் அது

மன்பார் புரக்குஞ் செயற்கிடை யூறிங்ஙன் வந்ததுண்டோ
என்பா னினது குறிப்பின்றி நிற்ற லிசைந்ததுண்டோ
இன்பாகு மேனியன் சிங்கார வேல னெழின்மயிலை
அன்பான வண்ணனின் றேள்வண்ண மிவ்வண்ண மான
[தென்னே. (48)

### தலைவன் உற்றது உரைத்தல்

ஆவிக் கருள்புரி சிங்கார வேல னருகிருக்கும்
தேவிக் கினியவன் பொன்னூர் மயிலைச் சிலம்பினண்பா
வாவிக் கயலை வலைவளைந் தாங்கென் மனத்தை மின்னூள்
காவிக் கருங்கண்ணி சூழ்ந்தே கவரக் கலங்கினனே. (49)

### பாங்கன் கழறல்

போதைச் சொரியும் பொழில்சூழ் மயிலைப் புனிதன்மலர்க்
கோதைப புயாசலன் சிங்கார வேலன் குலகிரிமேல்
காமதைப் பொருதும் விதிமாது நோக்கிற் கலங்கினையால்
பேதைப் பொருட்டிழப் பாரோ வறிவு பெரியரே. (50)

### தலைவன் கழற்றெதிர் மறுத்தல்

அருந்தமி ழாகரர் சிங்கார வேல ரணிமயிலைப்
பொருந்துநண் பாவெனைத் தேற்றவென் னூகும் புயன்சிறக்க
வருந்திருக் காஞ்சி நடுவெளி மேலுற வைத்தகுடப்
பெருந்தனங் கண்டவர் யார்மயங் காரிப் பெருநிலத்தே. (51)

### பாங்கன் தலைவனைப் பழித்தல்

மல்லிக்கு வேள்பணி சிங்கார வேலர் மயிலைநண்பா
வில்லுக்கு நேர்நுத லாள்பொருட் டாக மெலிவதுதான்
கல்லுக்கு வாய்மடங் காத பெரிய கணிச்சிபசும்
புல்லுக்கு நேரிய தன்வாய் மடங்குதல் போன்றதுவே. (52)

### தலைவன் வேட்கை தாங்கற் கருமை சாற்றல்

மேழி வளர்கொடிக் காராளர் வாழும் வியன்மயிலை
வாழி திருவருட் சிங்கார வேலர் வரையினண்பா
ஊழி பெயரினும் பேராவென் சார்பெனு மோங்குகரை
வீழி யிதழி மயல்வெள்ள மோத மெலிந்ததுவே. (53)

### பாங்கன் தன்மனத் தழுங்கல்

விரியா யிரங்கதிர் வெய்யோற்கு மின்மினி மிககவொளி
பிரியா தளிப்பது போலவந் தோறங்கள பார்த்திபர்க்கு
திரியா வறிவினை யானோ திருத்துவன் சீர்மயிலைப்
புரியாறு மாமுகன் சிங்கார வேலன் பொலங்கிரிக்கே. (54)

### பாங்கன் தலைவனோ டழுங்கல்

சேவைப் பணக்கொடி தேவாதி தேவன் திருமகன்பூம்
பாவைச் சினகர சிங்கார வேலன் பயின்மயிலை
மாவைப் புணரு மணிமார்ப நீதி மணம்பொருந்தாப்
பூவைக்கு மாலை மருவுதல் யான்முன் புரிதவமே. (55)

### பாங்கன் எவ்விடத் தெவ்வியற்று என்றல்

தண்ணேர் கடம்பணி சிங்கார வேலன் தடமலர்த்தேன்
பண்ணேரா மயிலையன் மேருவெற் பாமுன் படியளந்தோன்
கண்ணே நெடுங்கண் வளரிட மோவவன் கைக்குடையோ
விண்ணே பயிலிட மேதிய லேதந்த மெல்லியற்கே. (56)

### பாங்கன் இவ்விடத் திவ்வியற்று என்றல்

சோதிகண் மேவிய சிங்கார வேலன் சுராதிபனசீர்
வீதியின் மும்முர சார்க்கு மயிலை விசாகன்வெற்பில்
ஓதிய வங்க மெவையு முவமைக் குவமையதா
மாதியன் மேவு மிடமணம் வீசு மலர்ப்பொழிலே. (57)

### பாங்கன் தலைவனைத் தேற்றல்

கானுறை வள்ளி கனிவாய்ச்செந் தேன்சுவை கண்டுமகிழ்
வானுயர் கீர்த்தியன் சிங்கார வேலன் மயிலைநண்பா
தேனுகர் வண்டுக் கலர்மேவு தென்றற் றெரிபபதுபோல்
நானுன தாவி யனையா ணிலைகண்டு நண்ணுவனே. (58)

### பாங்கன் குறிவழிச் சேறல்

பயிலும் பெருவிறற் சிங்கார வேலன பதிமயிலை
மயிலும் பிணையு மெகினமுஞ சக்கர வாகமுமாம்
குயிலும் கிளியு மினமென்று மேவநங் கொற்றவனா
அயிலும் சுவையமு தன்னுள் மருவுங்கொ லாய்பொழிற்கே. (59)

### பாங்கன் இறைவியைக் காண்டல்

மண்ணுடர் போற்றிய சிங்கார வேலன மயிலைநண்பன்
உண்ணூடு மன்புறு மின்னு ளியலை யுரைத்திடுங்கால்
கண்ணு லறிவரி தென்றே செவிப்புலன கண்டவநதப்
பெண்ணு ரமுத மெதிர்நின்ற வாறென்ன பெற்றிமையே. (60)

### பாங்கன் இகழ்ந்ததற் கிரங்கல்

உடுமணி மாலையன் சிங்கார வேல னுயர்மயிலை
நெடுநக ரன்னவிந் நேரிழை யாளெதிர் நின்றுமைக்கண
கடுவுறழ் வேல்பொரக காமவெந் தீச்சுடக் கண்டபுண்மேல்
அடுபுதுக் கார மெனவிகழ்ந் தோதி னேனண்ணலே. (61)

### தலைவனை வியத்தல்

நிறைவா ருதியெழிற் சிங்கார வேலர் நெடுந்திரைசூழ்
பொறைவாணர் போற்று மயிலைத் தடத்தம் புயமலர்மேல்
உறைவாள் வருத்த மெலிகாய மின்றி யுரத்தின்வந்த
மறைவாணர் வேந்தன் பெருமையை யார்சொல்ல வல்லவரே. (62)

### தலைவியை வியத்தல்

மந்தா இனிமைந்தன் சிங்கார வேலன் மயிலையன்னுள்
கொந்தாரும் வெட்சித் தொடையுடை யான்வரைக் கொற்றவர்க்குச்
சந்தாபந் தீர்க்குந் தருணசந்தி ரோதையந் தண்ணளியால்
அந்தாகந் தீர்க்கு மமுதாவி நல்கு மணங்கிவளே. (63)

### தலைவன் தனக்குத் தலைவிநிலை கூறல்

வைச்சமெய்க் கீர்த்தியன் சிங்கார வேலன மயிலையன்னுள் (64)
அச்சமு நாணும் பயிர்ப்பு மடமையு மனபுறுகண
மச்சமுஞ் சோலைக் கெழில்செய் யுருவு மருவியிரு
பச்சிளநீர் கொண்டுநின் னருள்கண்டே னெங்கள் பார்த்திபனே.

### தலைவன் சேறல்

கரும்புங் கமுகமும் வாழையு மேவிய காமயிலைப் (65)
பெரும்புண்ணி யப்பொருள் சிங்கார வேலன் பிறங்கலின்வாய்
அரும்புந் தளிரு மலருஞ்செந் தேனு மளியுங்கொண்டு
விரும்பும் பசுங்கற் பகக்கொம்பர் காணிலென் மெய்த்தெய்வமே.

### தலைவியைக் காண்டல்

மதிநுதல் வேர்ப்பப புடைநோக்கி நோக்கம் வரமெவதிரக் (66)
கதிர்முலை விம்ம விருப்போங்க நின்றதோர் காமவல்லி
துதிமயி லாபுரிச் சிங்கார வேலவன் சூரனுளத்
ததிபயங் கொள்ளச் சிலைவாங்கு சேந்த னணிவரைக்கே.

### கலவியின் மகிழ்தல்

மன்மந் திரமுரை சிங்கார வேலன் மயிலையின்சேர் (67)
பன்மந்தி ரப்பொருள் செவ்வேள் புகழன்ன பாற்கடலில்
தன்மந்தரமை யரைவா யமுதுண்ணத் தந்ததிவள்
தன்மந் தரம்பத் தரைவா யமுதுணத் தந்ததுவே.

### தலைவியைப் புகழ்தல்

மெய்வா ரணத்துசன் சிங்கார வேலன் விசாகனன்பர் (68)
பொய்வா ரணநதவிர்த் தாள்வோன் மயிலைப் பொலங்கொடிக்கு
மொய்வா ரணமன்னு மைவா ரணமுலை மோகனமால்
கைவா ரணங்கனங் கார்மேவு வாரணங் கண்ணிணையே.

### தலைவியைப் பாங்கியொடு வருகெனப் பகர்தல்

கயிலைப் பொருப்பர் தருந்திருப் பாலகன் கற்றவர்வாழ் (69)
மயிலைப் பதிவளர் சிங்கார வேலன் மணிவரைமேல்
பயிரைப் புரக்க மழைமின் னெடுவரு பான்மையினென்
உயிரைப் புரக்க வரினுயிர்ப் பாங்கியோ டுற்றருளே.

**தலைவியைப் பாங்கிற் கூட்டல்**

தடத்துக்குத் தாமரை தாமரைக் காமலர் தண்மலர்க்கு
மடற்பெற்ற தேனந்தத் தேனுக்குத் தீஞ்சுவை வாய்த்தெனக்குக்
குடக்கொற்ற நீள்கொடிச் சிங்கார வேலன் குணமயிலை
இடத்துற்ற பூம்பொழி லாயத்துப் பாங்கியோ டெய்துகவே. (70)

**பாங்கற் கூட்டம் முற்றிற்று.**

---

## மதியுடம்பாடு.

**நாற்ற முதலிய ஏழானும் ஐயமுற்று ஓர்தல்**

சுருங்கிய வுண்டி தனிவைகல் தெய்வந் தொழாமைசெயல்
ஒருங்கு மறைத்தன முலைத்தோள் பணைத்தன்மை யோதிமணம்
திருந்து நடையிவை வேறுய வாறெவன் சீர்மயிலை
அரும்பு நகையருட் சிங்கார வேலன்வெற் பார்மகட்கே. (71)

**அவ்வகை தன்னால் ஐயந் தீர்தல்**

உணர்ந்தார் மயிலையிற் சிங்கார வேல னுமைபுதல்வன்
புணர்ந்தா ரிருமங்கை யர்பாகன் வெற்பிற் பொருந்தியகம்
கணந்தா திவர்மலர்க் கைசேர்மின் னுட்கொரு காவலரால்
மணந்தா துண்டெண்ப துரைத்தது கோதை மலர்மணமே. (72)

**தனைவியந் துரைத்தல்**

மாவரந் தந்தருள் சிங்கார வேலர் மயிலைவெற்பில்
தாவர மங்கையர் போலு மடந்தைநின் கண்மலரிந்
தீவர மேற்குளம் வேர்பபவு மாறு திருத்தவுமெய்
மேவரச் செய்யவுந் தக்கது வோவவ் வியன்சுனையே. (73)

**நடுங்க நாட்டம்**

வேதங்கள பஞ்சரத் தஞ்சுகங் கூறும் வியன்மயிலை
நீதங்கள் செபபிய சிங்கார வேல னெடுங்கிரிமேல்
மாதங்கஞ் சீறி மருமத்துத் தாக்கலு மாற்றியந்த
ஆதங்கந் தீர வடர்த்தான்கை வேல்கொண்டவ் வண்ணலுமே. (74)

**பெட்ட வாயில் பெற்றுச் சேறல்**

பணையோர் மயிலையன் சிங்கார வேலன் பருவரைவாழ்
பிணையே றனைய வுயிரா ரமுதம் பிறங்கியபுந்
துணையோ விரவி தருங்காமக் கோடைத் தனிவழிக்குத்
துணையே யெனவந்த தோழிக்கெ லாஞ்சென்று சொல்லுவனே.
(75)

### இரவு வலியுறுத்தல்

அரவுக் கிகன்மயி லேறிய வீரிய ஞானமயிலைக்
குரவுக் கிசைபுயச் சிங்கார வேலர் குலகிரிமேல்
இரவுக் கினிய திருமுகத் தாளென் றியம்பியபேர்
வரவுக் கிசைய வுரைபபே னிணங்கியென் மாங்குயிற்கே. (76)

### ஊர் வினுதல்

கார்காட்டுஞ் சோலை மயிலா புரிவளர் கந்தனவெட்சித்
தார்காட்டு மார்பினன் சிங்கார வேலன் றடஞ்சிலம்பில்
ஊர்காட்டுந் திங்க ளதனேடு நீரு முதித்தலினும்
ஊர்காட்டுங் காட்டு முரையால் விரைமல ரோதியரே. (77)

### பேர் வினுதல்

பாரூர் விசும்பும் படர்சீர்த்தி யென்றும் பயின்மயிலைச்
சீரூர் விளங்கிய சிங்கார வேலர் சிலம்பிடைநீர்
ஆரூர் வினவிலண் ணுமலை யோசொல்ல வல்லரெனில்
ஏரூர் நுமது பெயரேது சொல்லு மெனக்கிசைந்தே. (78)

### வேழம் வினுதல்

சவளச் செயக்கொடி வேளாளர் போற்றுந் தனமயிலை
குவளைத் தொடைபுனை சிங்கார வேலன் குவடனையீர்
தவளப் பிறைநிகா முத்தான கோட்டுமுத் தானமுமிழ்
கவளக் களிறொன்று வந்ததுண டோவிந்தக் கார்முகத்தே. (79)

### மரை வினுதல்

உருமரை வாய்க்கிண் கிணியணி பரத னுயர்மயிலை
தருமரைச் செந்துகிற் சிங்கார வேலன் றடங்கிரிமேல்
திருமரை போலு முகத்தீ ரெனவாளி சினக்கவஞ்சி
வருமரை போந்தது கண்டதுண் டோநும் வனத்திடையே. (80)

### பன்றி வினுதல்

உறிப்பன்றி வெண்டயி ருண்டருள் மான்மரு கோன்மயிலை
நெறிப்பன் னிருபுயச் சிங்கார வேல னெடுவரைமேல்
மறிப்பின்றி வானுரு மேறென வார்த்தையில் வாளிதைத்த
குறிப்பின்றி வநதுள தோசொல்லு மென்றன் குறிப்பறிந்தே. (81)

### மானேடு மனம் வினுதல்

வாராகி தந்தவர் சிங்கார வேலர் மகிழ்மயிலைத்
தீராகி யொன்று பொருமுலை யீரித் தினைப்புனத்தென்
சாராகி கொணடொரு மான்வநத தோவதைத் தான்தொடர்ந்து
போரா கியமனம் வந்ததுண டோவிடை போலினைநதே. (82)

### வழி வினாதல்

வேயினு முன்பதி னுரு யிரம்விடை மெல்லியலார்
வாயினும் வாய்வைத்த மாலணை யல்குல் மடநடையீர்
தாயினும் நல்லவன் சிங்கார வேலன் றடமயிலை
சேயின தாமலைச் சீறூர் புகும்வழி செப்புகவே (83)

### மொழியாமை வினாதல்

கவின்முத் தருண கிரிமுலை சேருங் கமலையன்னீர்
அவிமுத்த நீர்திறந் தாவெனத் தம்பல மாகுமன்றே
செவிமுத் திரைமொழி செப்புக வீறென்றுஞ் சீர்மயிலை
புவிமுத்தர் போற்றிய சிங்கார வேலர் பொருப்பிடத்தே. (84)

### இடை வினாதல்

அனம்படைத் தாண்புகழ் நெல்வேலி சூழு மணிமயிலைச்
சனம்டைத் தாண்டருள் சிங்கார வேலனைச் சாரிலர்போல்
தனம்படைத் தார்க்கு நடுவிலை யேலத் தனநிற்குமோ
சினம்படைத் தாலும் விழியீர் நடுவெது செப்புமினே. (85)

### யாரே இவர் மனத்தெண்ணம் யாது ? எனத் தேர்தல்

சீலத்தர் போற்றிய சிங்கார வேலர் திருமயிலை
ஞாலத் துயர்ந்த மலைமீதுவேட்ட நயந்தவர்போல்
ஆலத்தி னுடியஞ் சாமரை தேடின ரப்புறமாக்
கோலத்தை நேடினர் யாரோவென் றேவிவர் கொள்கையதே. (86)

### எண்ணந் தெளிதல்

பாதங்கள் பத்தர்க் கருளு மயிலையன் பங்கயச்செம்
போதங்க மாயவன் சிங்கார வேலனைப் போற்றலர்போல்
சேதங்கள் கூறி யிவர்வேட்டை யாடிய சேவகர்போல்
மாதங்க நாடி வருவாரென் மாதங்க வாஞ்சையரே. (87)

### இருவரும் உள்வழி ஒருமையிற் போதல்

பொருவன்மை மிகக செயவீர வாகுவென் புண்ணியன்முன்
வருவள்ளி நாயகன சிங்கார வேலன் மயிலையன்னூர்
உருவுந்தன் னீழலு மேவுதல் போலிவ ணுற்றனரிப்
பருவந் தனிசென்று நங்காத லோதும் பருவமதே. (88)

### கையுறை யேந்தி நின்று அவ்வகை வினாதல்

அன்னந் தருநடை பாலுஞ்செந் தேனு மருளுமொழி
முன்னந் தருஞ்செவ் விளநீர் முலையாம் முறைபடைத்தும்
மனனன் பெருந்திருச் சிங்கார வேலன் மயிலையன்னீர்
என்னுந் துடியிடை தானிளைப் பாக விருக்கின்றதே. (89)

### பாங்கி எதிர் ஏதின்மொழி கொடுத்தல்

துதிமான மகள்விண் ணவர்பெரு மான்மக யேதன
நிதிமான் மயிலையிற் சிங்கார வேல னெடுங்கிரியில்
கதிமான் பலபல நீரெய்த தாமென்ற காயமுறு
மதிமானு நீரெய்தன மானு மினிமதி மானெனவரே. (90)

### இறைவனை நகுதல்

காவினில் வாழைக் கனிதேன் சொரியுங் கவின்மயிலை
மேவிய வாகையன் சிங்கார வேலவன் வெற்பிவர்தாம்
ஏவினில் மான்மரை யானையெய் தோமென் றியம்புவர்கை
மாவிலை யேந்திலர் சேவகஞ் செய்தது மாவிலையே. (91)

### மதியினில் அவரவர் மனக்கருத் துணர்தல்

துள்ளுங் கயல்வயல் சூழு மயிலையன் சோதிமணி
கொள்ளுங் குழைச்செவி சிங்கார வேலன் குவட்டிவர்கள்
உள்ளங் கலந்த வுறவும் பகரு முரைமுழுதும்
கள்ளங் கலந்ததுங் காட்டிடு மீட்டுங் கண்ணிணையே. (92)

பாங்கி மதியுடம்பாடு முற்றிற்று.

---

## பாங்கியிற் கூட்டம்.

### தலைவன் உட்கோள் சாற்றல்

ஒளியோப்பு கோமலர் கொய்கோபெய் கோவளை கேசமொய்க்கும்
அளியோப்பு கோபத நீவிநிற் கோவிரு ளாணவந்தீர்த்
தொளிகாட்டு பார்வையன் சிங்கார வேல னுயர்மயிலை
வெளிகாட்டு சிற்றிடை யீரேவு மேவல் விரைந்தெனக்கே. (93)

### இதுவும் அது

செந்தேன் மலர்கொய்து தான்றரு கோவரைத் தேன்றருகோ
அந்தேன் சுவைபடு பாற்கடன் மீன்வலை யாற்றருகோ
பிந்தே னுமது பணியிற் பணிசெயப் பெய்வளையீர்
வந்தேன மயிலையிற் சிங்கார வேலன் வரையிடத்தே. (94)

### பாங்கி குலமுறை கிளத்தல்

நனைக்கற் பகக்கொடி வாணிதன கேள்வனை நான்முகப்போ
தனைக்கைக் கொடுகுட்டுஞ் சிங்கார வேலன நடமயிலை
பனைக்கைக் களிற்றுச் சேகரர்ச் சேகர பார்த்திபனீ
தினைக்கைக் குறவர் குடிவரு மானெங்கள் சேயிழையே. (95)

### தலைவன் தலைவி தன்னை உயர்த்தல்

சொல்லிற் பிறந்த பொருள்போன் மயிலையிற் சோதிசெங்கண்
எல்லிற் பிறந்தருள் சிங்கார வேலர்வெற் பேந்திழையே
கல்லிற் பிறந்த கதிர்மணி போன்மறக் கானவர்தம்
இல்லிற் பிறந்த திருவையிவ் வாறே னியம்புவதே. (96)

### பாங்கி அறியாள் போன்று வினுதல்

நித்தன் மயிலையிற் சிங்கார வேல நெடுங்கிரிமேல்
முத்தங் கொழித்து மணிவண்ட லாடி முருகுயிர்த்துச்
சித்தங் களிக்கு மடவார் பலருளுன் சிந்தனையை
வைத்தங் கிருக்கு மடவா ளெவள்சொல்லு மன்னவனே. (97)

### இறையோன் இறைவி தன்மை இயம்பல்

சாந்தணி மார்பினன் சிங்கார வேலவன் சண்முகவன்
பூந்தரு வாரு மயிலைப் பொழில்வளர் பொற்கொடிக்கு
மாந்தளிர் மேனி மதிமுக மான்விழி மாலளகம்
காந்தளஞ் செங்கை யிலவிதழ் கோங்கங் கனதனமே. (98)

### பாங்கி தலைவி அருமை சாற்றல்

கருத்தை நயனந் திருத்தவற் றேபுவி காவலவுன்
அருத்தி விரகந் தவிர்க்கெனப் பூமக ளன்னவளைத்
திருத்தி மொழிபவ ளியானேசொ லாய்விண்ணிற் றேவர்குடி
இருக்கு மயிலையிற் சிங்கார வேல னிருங்கிரியே. (99)

### தலைவன் இன்றியமையாமை இயம்பல்

தேவின்முன் னுனவன் சிங்கார வேலன் றிருமயிலை
நாவின்மின் னுளன்றி யின்றும் படைப்பந்த நான்முகற்குப்
பூவின்மின் னுளன்றி யின்றும் புரத்தலப் பூவைவண்ணர்க்
கோவிலும் மாரரு ளின்றேலின் றமென னுடலுயிரே. (100)

### நின்குறை நீயே சென்றுரை யென்றல்

கூந்தற் பிடிக்கு மதயானை வேழங் கொடுத்தருவிப்
பூந்தட் புனன்முகந் தூட்டும் பொருப்ப புகழ்மயிலைக்
காநதட் சிகையினன் சிங்கார வேலன் கனங்கிரியில்
சாந்தத் தனத்திக்கு நீயேசென் றுன்குறை சாற்றுகவே. (101)

### பாங்கியைத் தலைவன் பழித்தல்

தீதைத் தவிர்த்தருள் சிங்கார வேலன் றிருமயிலைச்
சூதைப் பொருமுலை யாட்கென் குறைசொலுஞ் சூழ்ச்சிமிக்க
மேதைப் பெரியனென் றெண்ணியிந் நாளுன்னை வேண்டுதலால்
பேதைப் பெயரின் றெனக்குமுண் டாயது பெய்வளையே. (102)

### பாங்கி பேதைமை ஊட்டல்.

யானைப் பருமருப பாலவேலி கோலி யலங்குதினைக்
கானைப் புரக்குங குறமானின ளேயைக் கவிநதுசுகத்
தேனைத் தரவல் லவளோ மயிலையிற் சேந்தனம்பொன
வானைப் பணிகொள்ளுஞ் சிங்கார வேலன வரையண்ணலே. (103)

### காதலன் முதறிவுடைமை மொழிதல்

வாடும பயிர்க்கு மழைபோ லன்னுண் வருத்தமெல்லாம்
வீடும் படிக்கரு ளேக்களித் தாண்முனனர் மெல்லியலாள்
தேடும் பொருளபுகழ் பூசனை வாய்த்த திருமயிலை
கூடும் பெருகருட் சிங்கார வேலர் குலவரைக்கே. (104)

### முன்னுறு புணர்ச்சி முறையுறக் கூறல்

வாருதி மீது வருநதி சேருமம மாநதியைச்
சேருதி யென்றுபின செபபவா வேணடுங்கொ றண்சிலம்பா
பாருதி செலவியை முன்போ லணைந்தருள் பான்மயிலைத்
தாருதி யாகஞ்செய் சிங்கார வேலா் தடங்கிரிகளே (105)

### தன்னிலை தலைவன் சாற்றல்

அளிப்பெடை பண்பயில் சோலை மயிலை யவர்க்குநிதிக்
களிப்பருள் வாஞ்சையன சிங்கார வேலன் கருணைமின்னே
குளிபபினு மோடி யொளிபபினுங் காயுங் கொழுங்கனலாம்
வெளிப்படுங் காமத்துக் குன்னரு ணீரன்றி வேறிலையே. (106)

### பாங்கி உலகியல் உரைத்தல்

பாட்டா லுயர்தமிழ் நக்கீர ராற்றுப் படைக்குவந்து
தாட்டா மரைதரு சிங்கார வேலவர் தண்மயிலை
நாட்டா ரறியநன ளுள்பெற வீன்றவர் நலகமின்னை
வேட்டா லணைத லிருவோர் குடிக்கும் விழுமியதே. (107)

### தலைமகன் மறுத்தல்

இடுகுண டலகன்னன் சிங்கார வேல னெழின்மயிலைத்
தொடுகுங் குமமுலை மானுளைச் சேர்வனின் சொற்படியே
கடுகும் பசியொடு வந்தார்க்குச் சோறு கழனிகொண்டு
முடுகும் படிசமைத துண்மினென் றேசொலல் மொய்குழலே.
(108)

### பாங்கி அஞ்சி அச்சுறுத்தல்

கல்லார மார்பினன் சிங்கார வேலன் கவின்மயிலை
வில்லாரு மையுரு வெய்யசொல் லாவரும் வேளையிதால்
எலலாரு மேற்றிசை சென்றனர் யாமு மிவணகல்வோம்
ஒல்லாது நிற்பது மன்னுசெல் கங்கு லுறுமுனமே. (109)

**தலைவன் கையுறை புகழ்தல்**

இதமுற்று நல்கிய சிங்கார வேல ரெழின்மயிலை
முதலவர்க்கு முன்னருட் சத்திக்குத் தாண்டு முன்னும்விந்துப்
பதமுற்ற வந்த முறுமணி மூவொன பதின்மர்மின்னுர்
மதமற்ற வேவல் செயத்தக்க தாகு மகிமைமின்னே. (110)

**பாங்கி மறுத்தல்**

ஒண்சங்க நித்திலந் தாரகை போல வொளிர்மயிலை
வண்சங்கம் போற்றிய சிங்கார வேலா வரையண்ணலே
வெணசங்க முத்தணி நீதரின் மான்முலை மேலணிந்தால்
பெண்சங்க மாண்சங்க நல்குமுத் தோவென்ப பேசுவரே. (111)

**ஆற்று நெஞ்சினேடு அவன் புலத்தல்**

செய்யுறை சங்க மதிபோ னிலாவு திருமயிலை
வையுறை நீளிலைச் சிங்கார வேலவர் மால்வரைமேல்
கையுறை யேற்றிவள் வாயுறை யின்சொலுங் காட்டிலணம்
மெய்யுறை வேதனை தீர்வதெவ் வாறென் வெளிநெஞ்சமே. (112)

**பாங்கி ஆற்றுவித்து அகறல்**

பேரிகை முனறி ரெறுமார்க்கும் வீதிப் பெருமயிலை
ஆரியை பாலகன் சிங்கார வேல னணிவரைமேல்
காரிகை பானுன கலித்துறை யோதிக் கருத்தறிந்தால
சீரியல் பாமணி மாலைகொள் வேன்வந்து தேர்மன்னனே. (113)

**தலைவன் மடலே பொருளென மதித்தல்**

இந்திர செல்வம் புவிமீ தருள்பவ னோர்மயிலைத்
தந்திர வேதியன் சிங்கார வேலன் றுணிவேயாப்
புந்தியின மேவிய காமவெம் பேயினைப் போக்குதற்கு
மந்திர வாதி தருமே டல்லாது மருந்தில்லையே. (114)

**பாங்கிக்கு உலகின்மேல் வைத்து உரைத்தல்**

வழிபடர் மாந்த ரிளைப்பாறத் தேன்கனி வாய்த்திடுமாம்
பொழின்மயி லாபுரி சிங்கார வேலர் பொருப்புமினனே
ஒழிவறு காமமுற் றோர்நீ றெருக்கு முடலணிந்து
இழிபெற வோலையை வாசித் தவரெனக் கிட்டுவரே. (115)

**அதனைத் தன்மேல் வைத்துச் சாற்றல்**

தடமாரு நீலத்து வண்டோ லிடுந்தண் டலைமயிலை
இடமாரு மெய்யெழிற் சிங்கார வேலர்வெற் பேந்திழையே
படமார நின்றிரு மாறு ளுருவம் பரிந்தெழுதி
மடமாவி னேறிநுஞ் சீறூரி ளூடே வருகுவனே. (116)

### தலைமகன் அவயவத்து அருமை சாற்றல்

கோமான மயிலையிற சிங்கார வேலன குவட்டணணலே
பூமாதை நானமுக ராயிர மாமணிப் பொற்படமேல
தாமா யமைததுங் குரூபம தானதத தனமைகணடும
பூமாதை யோாபடத் தெவ்வாறு வாய்ககப பொறிபபதுவே. (117)

### தலைமகன் தன்னைத்தானே புகழ்தல்

திருவார் மயிலையிற் சிங்கார வேலர் சிலம்பிறைபபுப்
பொருவாத வனனங குணங்கொடுத தாலப் பொருவில்குணத்
துருவா ரழகு முருவு மெழுதுவ ளொணணுதலாள்
அருவா மிடையொனறு நானெழு தாம லமைநதிடுமே. (118)

### பாங்கி அருளியல் கிளத்தல்

செபபனை யொததருள சிங்கார வேலர் திருவருளே
ஒபபனை செயயு மயிலைப் பதியை யுறுதவர்போல
தபபனை யினறி யடைககலப பிளளைக டாய்வருந்த
அப்பனை மாய்த்து மருமானைச சேர்த லருளல்லவே. (119)

### பாங்கி கொண்டுநிலை கூறல்

கருமனனு நோய்தவிாத தெனறலை மேலிரு கால்பதித்த
குருமன்ன னனவன சிங்கார வேலன் குலமயிலை
வருமனன வாநின குறைநா ணியம்ப மனமகிழ்ச்சி
தருமனன நோவ திலையேற பிணமாவைச சமைததருளே. (120)

### தலைவி இளமைத் தன்மை பாங்கி தலைமகற்கு உணர்த்தல்

சிலையோர் புயததண்ணல் சிஙகார வேலா திருமயிலைக்
கலையோா பெரிய தனமவர விலலைநற காவியங்கண
நிலையோர் படியனறி யோதி முடிக்கு நெறியறியா
மலையோர் மகளிளம் பேதைக்கென ஞேசொலும் வாசகமே. (121)

### தலைவி வருந்திய வண்ணம் தலைவன் உரைத்தல்

குளமத ராசன படைவீ டெனத்திகழ் கோலமிக்க
வளமயி லாபுரிச் சிங்கார வேலர் மணிவரைமேல்
இளமது வேனும் வெறிபெரி தாமவ் விளம்பிடியால்
உளமதுவ றடு மயலபெரி தாம்பிறை யொண்ணுதலே. (122)

### தலைவி செவ்வி யருமை பாங்கி செப்பல்

முன்றிற் புறத்து மணிவண்ட லாட முதுகுரவர்
மனறற குழலியைச் செலல விடாருன மயலுரைக்க
எனறைகருஞ் செவ்வி யெளிதன றரிய தெழினமயிலே
வெனறிக குருபரன சிங்கார வேலவன் வெற்பணணலே. (123)

### தலைவி செவ்வி யெளிமை தலைவன் செப்பல்

நந்தா விளக்கனை யாட்கென் குறைசொல்ல நாடிநின்றல்
சாந்தா டவித்தெனறல வீசத் தளிர்க்குந் தளிர்க்குலம்போல்
சிந்தா குலத்தைத் தவிர்ததோகை கூருந திருமயிலை
வந்தாண டருளிய சிங்கார வேலர் வரைமயிலே. (124)

### பாங்கி என்னை மறைப்பின் எளிதென நகுதல்

குடைகொண்டு வையம் புரக்கின்ற மீனவர் கோனமயிலைக்
தொடைகொணட வெட்சியன் சிங்கார வேலன் சினைவரைக்கட்
கடைசென்ற பூங்குழை யாட்கு முனக்குங் கருததிணங்க
இடைநினற வென்னை மறைத்தாற் றலைவரு மெணணியதே. (125)

### அந்நகை பொறுது அவன் புலம்பல்

மணங்காண் மயிலையிற் சிங்கார வேலனை வாழ்த்து
[விண்ணோர்க்
இணங்கார் புரம்வெய்ய தாய்ச்செய்த தீச னிளநகைதான்
அணங்கா திணங்கு மெளியேன் புரம்வெய்ய தாக்குகின்ற
குணங்காண வந்தது சாலநன் றமுன குறுநகையே. (126)

### தலைவனைப் பாங்கி தேற்றல்

எணணூறு மொன்று மிசைநா வலர்தமி ழென்றும்வளர்
தண்ணூர் மயிலையிற் சிங்கார வேலர் தடங்கிரிமேல
கண்ணு னவள்கண் மணியா மிருவா கருத்துமொன்றல்
உண்ணுடு முன்செயல வாய்கரும்பொய் யாதைய வோர்நதருளே.
(127)

### பாங்கி கையுறை ஏற்றல்

கமரிட்ட மாவடு வுணடருள் வோனமகன் கணமயிலை
நமரிட்ட மானவன் சிங்கார வேல னளிவெற்பனே
அமரிட்ட வேற்க ணிமித்தம்பன் னுள்வர லாலுங்கண்டோர்
தமரிட்ட முத்தென மாலுங்கொள் வாங்கை தருமணியே. (128)

### தலைவன் ஆற்றல்

எண்முத் தலம்புகழ் மாமயி லாபுரி யென்குமரன்
வணமுத்தர் போற்றிய சிங்கார வேலன் மயிலுவந்தோன்
தண்முத்து மால்வரை மானுள்கை நலகியிதத் தையல்கொண்ட
வெண்முத்தஞ் செம்முத்த மாகும்பன் முத்தொளி மேலிடுமே.
(129)

**இறைவன் தனக்குக் குறைநேர் பாங்கி இறைவிக்கு அவன்குறை உணர்த்தல்**

பொருளொன் றிழந்தவர் போனேடி வாடிப் புனத்தொருவர்
மருளொன்றி நிற்ப ரகலுவர் மீளுவர் வார்த்தைசொல்லார்
இருளொன்று கூந்தலென் னேவவ ரெண்ணிய தேர்மயிலே
அருளொன்று மேனியன் சிங்கார வேல னணிவரைக்கே. (130)

**இறைவி அறியாள் போன்று குறியாள் கூறல்**

மகளுசேர் மயிலேயிற் சிங்கார வேலர் வரத்திரு
முகம்போன் மலர்ந்திதழ்ச் செவ்வியிற் றண்ணளி முற்றிநல்வா
சகஞ்சேர்ந் தினியகண் மேவிய வாசம்பொன் றுதுபயில
அகஞ்சேர்ந்து தோன்றுதல் காணணங் கேதடத் தம்புயமே. (131)

**பாங்கி இறையோற் கண்டமை இயம்பல்**

சிலேமான் வரசு ரேந்திரர் போர்க்கெதிர் சென்றடாத்து
நிலேமான மேவிய சிங்கார வேலர் நெடுங்கிரிமேல்
மலேமானும் பூண்முலே நாம்விளே யாடும் வனத்திடையோர்
கலேமானே வேட்டஞ்செய் தார்போல்வந் தார்தமைக் கண்டனமே. (132)

**பாங்கியைத் தலேவி மறைத்தல்**

பெற்றுரின் மிக்க பெருங்காதல் கொள்ளவென் பெற்றியறி
துற்று யதற்குத் தகவுரைத் தாயல்லே யொண்பொருணூல்
கற்றுர்க் குதவுந் திருவாளர் வாழுங் கவின்மயிலேப்
பொற்றுர மார்பினன் சிங்கார வேலன் பொருப்பணங்கே. (133)

**பாங்கி என்னே மறைப்ப தென்னெனத் தழால்**

ஐம்பொறி யன்றி மனத்தான் விடய மறிவதுண்டோ
எம்பெரு மாட்டி யெனேயன்றி நீயெண்ணு மெண்ணமுண்டோ
உம்பரை வாழ்வித்த சிங்கார வேல னுவந்திருந்த
இம்பரின் மிக்க மயிலேக் குயிலி னிசைத்தருளே. (134)

**பாங்கி கையுறை புகழ்தல்**

நீடிய தண்டலே வானள வோங்கு நிதிமயிலே
நாடிய கீர்த்திமெய்ச் சிங்கார வேலனே நம்புமன்னன்
தேடியென் கையிற் றருமுத்த மாலேயிற் சேர்முத்தினோர்
கோடியுங் கோடி நிதிபெறுங் கோடி குணக்கொடியே. (135)

**தோழி, கிழவோன் துயர்நிலே கிளத்தல்**

ஆடுஞ் சரணக் கபாலீசர் மைந்த னணிமயிலேத்
தேடும் பெரும்பொருட் சிங்கார வேலன் சிலம்பிலங்கை
வாடுந் தனையென மெய்வாடி யேங்கி வளர்த்தெருவர்
கூடுந் திகைப்பொடு நிற்பர் நினேப்புன் கொடியிடையே. (136)

### பாங்கி மறுத்தற் கருமை காட்டல்

மதுவொன்று மாதாசொல இன்னரா வாஞ்சிக்கு மாமயிலை
விதுவொன்று மன்னன சிஙகார வேலவன வெறபணங்கே
பதுமந திகழ்பொயகை யோதிமம பேடையைப் பாற்சிறகால்
கதுமென றணைததலகண் டேஙகிநின றுளெரு காவலனே. (137)

### தலைவன் குறிப்பு வேருக நெறிப்படக் கூறல்

பொனமாாபு மாமனை மாமனைத் தநதையைப் போநதளிதத
நனமா மயிலையிற் சிங்கார வேலனை நாடலர்போல
தனமாாபு கஙகையுந தாளிணை யனறிலுந தாஙகுபடம்
நின்மாமை மேனியு மாமபடி யுளள நினைந்தனரே. (138)

### பாங்கி தலைவியை முனிதல்

எயிலகாண் வரையுரந் தாருகன மார்பக மீடழித்த
வெயிலகாலு மாதவன் சிஙகார வேலன வியனமயிலைப்
பயில்கா தலருயிாப் பாஙகியர்க் குணமை பகர்தனன்றல
மயிலே யெனது பணிமொழி கேட்பது மாண்பலலவே. (139)

### தலைவி பாங்கியை முனிதல்

கண்ணுங் கருத்துங் கவாநதெனை யுன்றன் கருத்தின்வழி
நண்ணும படிசெயு நீபிறா போல நவிலவதெலலாம்
ஒண்ணும படியல்ல வீணே வெகுளவதே ஞெண்மயிலை
எண்ணுங் குருபரன் சிஙகார வேலனவெற் பேநதிழையே. (140)

### தலைவி கையுறை ஏற்றல்

கனங்கமழ பூஙகுழற காாத்திகை மூவிரு காரிகையாா
தனஙகளின பாலுண்ட சிங்கார வேலவர் சார்மயிலைத்
தினஙகனி வாயமுதத மெனபாற்கொண டாயின்று சேயிழையுன்
மனஙகனி வாய்முத்த நீதரின யானென மறுப்பதுவே. (141)

### தலைவி கையுறை ஏற்றமை பாங்கி தலைவற்குணர்த்தல்

திடமுற்ற மால்பணி சிஙகார வேலர் திருமயிலைத்
தடமொதத தோளணண னீதநத முத்தவ டன்கையுறக்
கடலிற் பயினறுதன் றுயினை மேவிக் கனகமலை
இடனிற பொருந்தி நிறைமதி நோக்கி யிருக்கினறதே. (142)

### பாங்கி குறியிடங் கூறல்

மதனகனி ருர்ந்தவன் றேர்பரி காகளம வாாசிலைகாண்
விதமபெற மேவிக் குடைபோல வயிர மிளிர்ந்துலகோா
பதம்பயி லாத மலர்ச்சோலை வேலைப பதிமயிலை
நிதங்குடி கொண்டருள் சிங்கார வேலர் நெடுங்கிரிகசே. (143

### குறியிடத்து இறைவியைக் கொண்டு சேறல்

சேயிழை நினகந் தரம்வென்ற பூகந் திறையளித்த
பாயின முதத மரகதஞ் செய்ய பவளமெல்லாம்
நீயினி நோக்க வருதிதண் சோலையி னீண்மயிலை
யாயினை யொத்தவன் சிங்கார வேல னணிவரைக்கே. (144)

### குறியிடத்து உய்த்து நீங்கல்

பெரிதா முலைக்குஞ் சிறிதா மிடைக்கும் பெருங்களிறும்
அரிமானு மஞ்சிநின ருர்க்கினு மார்க்கநின் னம்புயத்தான்
புரிசாரல் வன்மை பெருதுநின மான்மலர் போய்க்கொணர்வேன்
பிரியா மயிலையிற் சிங்கார வேலர் பெருங்கிரிக்கே. (145)

### தலைவன் இடத்து எதிர்ப்படுதல்

தாகந் தவிர்க்க விளநீரசந் தாபந் தனக்குமதி
சோகந் தவிர்க்க வுயிருக் கமுதஞ் சுமந்துவந்தென்
ஆகம் பொருநதுயிாச் சிங்கார வேல னணிமயிலை
ஏகன் குமர னருளபோலு நீயிங் கெதிர்ப்பட்டதே. (146)

### இதுவும் அது

கோலத்தை மேவு மயிலையன் றேவர் குலம்விளங்கும்
காலததைக் காட்டிய சிங்கார வேலன கனங்கிரியில்
ஞாலத்தைக் காத்தவ னுனெற்குக் கஞ்ச நயந்தபிறைப்
பாலத்தை யார்மக டானமேவ வந்ததென் பாக்கியமே. (147)

### புணர்ச்சியின் மகிழ்தல்

வாரக் கருணையன் சிஙகார வேலன் மயிலையன்னுள்
ஆரத் தழுவிய தோளுந் துணைமுலை யாரமெல்லாம்
சேரக் கருவிய நோக்குமின் சொல்லுந் திளைந்திளைந்து
பாரப் பருப்பது பார்ததே மகிழுமென பார்வைகளே. (148)

### புகழ்தல்

கண்ணுக்குச் சித்திர மேனிக்குச் சந்தனங் காதினுக்கு
வண்ணப்பன யாழொலி நாசிக்கு மல்லிகை வாய்க்கமுதம்
தண்ணுற்ற போலம் பொறிக்குமின் பாயின டண்மயிலை
அண்ணற் சரவணச் சிங்கார வேலன்வெற் பாரணங்கே. (149)

### தலைவன் தலைவியை ஆயத் துய்த்தல்

எழுதிய சித்திரம பற்பல வாறறி வெய்தவுயிர்
தழுவிய வாறென மாதே நின் ஞயத்தைச் சாரநதருள்வாய்
உழுதொழி யாத வளஞ்சூழ் மயிலைய னேங்கிளைம்
முழுதுறை மேனியன் சிங்கார வேலன முதுகிரிக்கே. (150)

### ஏய்திப் பாங்கி கையுறை காட்டல்

நினைப்போர்தம் முள்ளத் திருபபோன் மயிலை நிருமலன்சூர்
முனைப்போர் பலவென்ற சிங்கார வேலனை முனைலர்போல்
நனைபபோது கொய்து வருந்தேல் சுரும்புறை நல்லமணச்
சுனைப்போது செந்தளிர் கொண்டுவந் தேன்குழல் சூட்டுதற்கே. (151)

### பாங்கி தலைவியைப் பாங்கிற் கூட்டல்

எல்லாப் பொருளும் படைத்தருள் புண்ணிய மின்பமிகு
வல்லார் மயிலையிற் சிங்கார வேலன வரைமயிலே
ஒல்லாது நிற்ற லிவணவிட் டளிபல வோதிவலல
நல்லர் ரினததினை நண்ணுவ நாளும் நலமபெறவே. (152)

### பாங்கி தலைவற்கு ஓம்படை சாற்றல்

வழிகுழி யாக நடந்திளைத் தெய்த்தவன் வார்கழற்கால
பொழிமது வம்புயப போதாக் கியவெனைப் புந்திகொள்ளா
தொழியினு நன்றிவள் வாடாமற் காத்தரு ளொண்மயிலை
விழியினை யாற்றுசு சிங்கார வேலவன் வெற்பண்ணலே. (153)

### விருந்து விலக்கல்

தெள்ளிக் கொழித்த தினைமாவுந் தேனுந் திருந்தநுகர்ந்
தள்ளத் தருமிருள செல்லா தமர்நதிங கரசவெற்பர்
உள்ளக் களிப்பிற் குரவைகண் டேசெ லுயர்மயிலைப
பிளளைப் பெருமையின் சிங்கார வேலன் பெருவரைககே. (154)

### விருந்து இறை விரும்பல்

நனமனத் தோகை வெளிப்பட்ட வாறெனை நங்கைநல்லாய்
இன்முக மின்மொழி செய்தரு ணீநன் இயற்றுவதும்
என்மனம் வேண்டத் தருமே கழனி யியன்மயிலைப்
பொன்மலிக் கச்சினன் சிங்கார வேலன் பொலன்கிரிக்கே. (155)

பாங்கியிற் கூட்டம் முற்றிற்று.

---

## பகற்குறி.

### கிழவோன் பிரிந்துழிக் கிழத்தி மாலையம்பொழுதுகண் டிரங்கல்

அன்பா மெனக்கு மவர்க்கும் பிரிவிடை யானதுபோல்
வன்பா நிசிக்கும் பகற்கு மிடைவநத மாலையினுல
என்பா லுயிரதவிக் குஞசக்கர வாக மெனுமயிலை
தன்பா லுவந்துறை சிங்கார வேலர் தடங்கிரிக்கே. (156)

### பாங்கி புலம்பல்

வெம்போது செல்லக் கரும்போது மேலவர வின்முளைதத
செம்போது நநதிரு மாமாது மேனியிற் செவவிபெற்று
வம்போட வின்று வகுததுமென் ருமினி வாழ்மயிலைக்
கும்போ தையன்குரு சிங்கார வேலன் குலவரைக்கே. (157)

### தலைவனிடம் தலைவி வருந்தல்

புணர்வும் பிரிவும் பொருத்திய தாகம் பொருவிழிகள்
உணரும் பிழைசெய்த தின்றே துயில்கொண் டொளித்தவர்க்
[கென்
வணருந துயரு மனமேசென் றேதுதி மாமயிலைத்
துணைதுன் றியபுயச் சிங்கார வேலன் சுனைவரைக்கே. (158)

### தலைவியைப் பாங்கி கழறல்

களவிற் பெருநிதி வாரங்க ணேராத காரணத்தால்
அளவிற் பிரிந்ததுண் டேபிறர் தூற்ற வழுஙகுவரோ
உளமெச்ச நாடி வருங்கால் வரும்பெரி யோன்மயிலை
வளமைத் திருப்புகழ்ச் சிங்கார வேலர் வரைமயிலே. (159)

### தலைவி முன்னிலைப் புறமொழி மொழிதல்

கரைசாய முன்னுள்ள கல்லணை சாயக் கடுகிவரும்
வரைசாய் நதிக்கு மலரணை போலென் மனத்துயர்நீர்க்
குரைசா ரணைதடை யோவுரைப் பார்க ளுணர்குவரோ
பரைசார் மயிலையிற சிங்கார வேலர் பரங்கிரிக்கே. (160)

### பாங்கியொடு பகர்தல்

கைம்மா றுருமுகில் பெய்மாரி பொய்த்தெனக் காதலரும்
உய்ம்மாறு செய்வது பொய்த்தா லுரைப்பதெ னொண்டொடியார்
மைம்மான விழத்துமி னீத்தெழு காற்கேள் வரைவணக்கம்
செய்ம்மா மயிலையிற் சிங்கார வேலர் சிலம்பணங்கே. (161)

### பாங்கி அஞ்சி அச்சுறுத்தல்

ஞான வரோதையர் சிங்கார வேலர் நலமயிலை
மானவா காதலி னல்கிளி யோப்பல் மறந்தனையால்
ஏனலை யேனலை வாய்ச்சுகங கொண்டதெங் சேகினையென்
றீனமி லன்னை சினததே மனையி லிருத்திடுமே. (162)

### நீங்கற்கு அருமை தலைவி நினைந்து இரங்கல்

தென்பால புரக்கு முகுந்தன் மாமணச் சேவைசெய்ய
இன்பா ரருளபுரி சிங்கார வேல ரியணமயிலை
அன்பாளர் தம்மைப் பிரிந்துயிர் வாழு மதனின்மிக்க
துன்பா ரழலி னிருப்பது சாலச் சுகமுடைத்தே. (163)

### தலைவிக்கு அவன்வரல் பாங்கி சாற்றல்

நாமணி மாமணி நாண்விட நானுற நாமணியின்
பூமணி யோசை செவியுறு மனபர் புனைநெடுந்தேர்
ஆமணித் தாயது கண்செவி போன்மகிழ் வாமயிலைத்
தேமணி மார்பினன் சிங்கார வேலன் சிலம்பணங்கே. (164)

### பாங்கி சிறைப்புறமாகச் செறிப்பு அறிவுறுத்தல்

எண்ணும் பிரம முதலைந்து வேள்விசெய் யில்லறம்வாழ்
வண்ண மயிலையிற் சிங்கார வேலா் வரைப்புனத்தே
கண்ணு மியலு முரையு முவமையைக் காண்பதின்றி
நண்ணு முருவக மாம்போலு நாளுநறு நன்னுதலே. (165)

### தலைவிக்குத் தோழி முன்னிலைப் புறமொழி மொழிந்து இற்செறிப்பு உணர்த்தல்

அழைக்குங் கரங்கொண் டவாபோற் கொடிமதி வார்மயிலை
தழைக்குங் கருணையன் சிங்கார வேலன் தடங்கிரிமேல்
குழைக்குஞ் சிலையன்பர் தாமறந் தாலுங் குலமயில்காள்
மழைக்குந் தளமின்னை நீர்மற வாது மதித்திருமே. (166)

### பாங்கி தலைவன்முன் நின்று இற்செறிப்பு உணர்த்தல்

முதிர்கின்ற கல்வி யறிவாளர் நன்மை மொழிமயிலை
அதிர்கின்ற கிண்கிணிச் சிங்கார வேலர்வெற் பார்தினைதான
கதிர்கண்ட போது பகலென்று யாமினிக் காவல்விட்டேம்
எதிர்கண்ட வூரிது வெம்மூர் பொனமாலை யிறையவனே. (167)

### பாங்கி ஓம்படை சாற்றல்

சோர்ந்தா லிடையடை கைக்குப சாரங்கள் சொல்வதுண்டோ
வார்ந்தார் குழலியைக் காவெனச் சொல்வதென் மன்னுபுகழ்
சார்ந்தான் குமர குருநாத பார்த்திபன நன்மனத்தில்
சேர்ந்தான் மயிலையிற் சிங்கார வேலன் சிலம்பண்ணலே. (168)

### தலைவன் தஞ்சம் பெறுது நெஞ்சொடு கிளத்தல்

போதினை மான மலர்மகள் வாழ்வு பொலிமயிலை
யாதினை யாதருள் சிங்கார வேல ரருவிவெற்பில்
கோதினை மேற்கொண் டெனதுளம் வாடக் குறவர்செய்த
மாதினை வாயக்குர லோதின வோசெல்ல மாதுனையே. (169)

பகற்குறி முற்றிற்று.

---

## பகற்குறி இடையீடு.

### பாங்கி இறைவனைக் குறிவரல் விலக்கல்

கனவேங்கை யர்க்கருள் சிங்கார வேலர் கவினமயிலைப்
புனவேங்கை யீருரி யாடையன் பெற்ற புதல்வர்வெற்பில்
வனவேங்கை வாய்விட்ட போதச்சஞ் செய்தது மானிமையாம்
சினவேங்கை வில்லார் தடிவார் தினைமனைச் செல்லுவமே. (170)

### பாங்கி இறைவியைக் குறிவரல் விலக்கல்

மெய்காட்டும் வாட்டமு நாட்டமுந் தேட்டமு மெய்ப்பசப்பும்
கைகாட்டுங் கோல்வளைச் சோர்வுங்கண் டன்னை கவன்றுயிர்த்தாள்
மைகாட்டுங் கண்ணி பயிலிட மன்றிது மாமயிலை
மொய்காட்டும் வாகையன் சிங்கார வேலன் முகில்வரைக்கே. (171)

### இறைவி ஆடிடம் நோக்கி அழிதல்

குருவிற் சிறந்த குருமயி லாபுரிக் கொற்றவன்சீர்
தருவிற் பனனெங்கள் சிங்கார வேலன் றமிழ்க்கிரிமேல்
மருவிப் பிரியினு மாய்ந்து பிரியெனும் வாய்மையறிந்
தருவித் தினைநம் பிரிவெண்ணி மாய்வ ததிசயமே. (172)

### பாங்கி ஆடிடம் விடுத்துக்கொண்டு அகறல்

மன்னும் மயிலையிற் சிங்கார வேலர் வரைமடமான்
பன்னு முளத்தினை நின்காதல் கொண்டு படரவுன்பால்
பொன்னன்ன மேனியை நாண்கொண்டு சென்றிட
[போயினளென்
றுன்னு மணிமயில் காளன்பர் மேவி னுரைத்திடுமே. (173)

### பின்றால், நெடுந்தகை குறிவழி நீடுசென்று ஏங்கல்

அளிசெய்க் குவளையும் வேயுஞ் செழித்தென வாவியன்னுள்
வெளியு மகழுங் கலந்தே விழியெதிர் மேல்வரலால்
ஒளிசெய் மனையிடைச் சென்றன ரோமொழி யோங்குசெந்தேன்
துளிசெய் மயிலையிற் சிங்கார வேலர் சுடர்வரைக்கே. (174)

### வறுங்களம் நாடி மறுகல்

ஆத்தன் மயிலையிற் சிங்கார வேல னருளிலர்போல்
காத்தலி னத்தினை மாய்ப்பது பார்க்கக் கருத்திலராய்
நீத்தன ரேலவ ரென்னுயிர்க் கென்சொல்வி நேரிழையார்
மாத்தம தூர்நடந் தார்சொல்லு நல்ல மயிலினமே. (175)

### தலைவி வாழும் ஊர்நோக்கி வருந்தல்

சிலையேறு மஞ்ஞையும் யானையும் நாரதன் செய்மகத்தின்
தலையேறு மேறிய சிங்கார வேலன் றடமயிலைக்
கலையேறு சிற்றிடை வாழ்மலை யீதினிக் காண்பதென்னே
மலையேறி னுற்றெய்வ மங்கேள்வி யுண்டோயின் வந்தவர்க்கே.
(176)

பகற்குறி இடையீடு முற்றிற்று.

## இரவுக்குறி

### இறையோன் இரவுக்குறி வேண்டல்

இனமை பிறப்பில் வருந்தாமன் ஞான மெனக்கருள்வோன்
வன்னந தருபுயச் சிங்கார வேலன் மயிலேயனை
அன்னந் தனந்தரப் பெறளு லிரவி லகல்வதினறே
பொன்னம் புயத்திரு வேநான் விருந்துங்கள பொலிவரைக்கே.
(177)

### பாங்கி நெறியினது அருமை கூறல்

தோட்டுத் தொடைய றுயல்வரு மார்பினன் சூழ்மயிலை
நாட்டுக் குவந்தவன சிங்கார வேல னளிர்வரைமேல்
கோட்டுக் களிறுங் கொடுவரி வேங்கையுங் கோளவினையை
வேட்டுத் திரிகங்குற் காட்டுச் சுரத்திடை மேவரிதே. (178)

### தலைவன் நெறியினது எளிமை கூறல்

சுரும்புண்ட தேனறெடைச் சிங்கார வேலர் துறைமயிலைக்
கரும்பெனற மங்கை மணங்காட்ட லன்றிக கனவரைமேல்
வரும்புண்ட ரீகமு மாமபலு நீலமு வாதிக்குமோ
விருமபந்த மாமதி வெய்யோ னெனுமெனறன் மேனிகண்டே.
(179)

### பாங்கி அவன்நாட் டணியியல் வினுதல்

கூடிய வள்ளி மணவாளன் தேவர் குலப்பயிரை
வாடியிற் காததவன சிங்கார வேலன மயிலைவெற்பா
ஆடிய காவெவை சூடிய போதெவை யாரமெவை
பாடிய பாவெவை நின்னுட் டவர்கள் பகர்ந்தருளே. (180)

### தலைவன் அவள்நாட் டணியியல் வினுதல்

பொன்னுர் திகிரித் திருமால புதல்வனைப பொறபின்வென்ற
தென்னுர் மயிலையிற் சிங்கார வேலர் செழுங்கிரிவாழ்
மினனுர் பயிலு மிடம்புனை நீண்மலர் மெய்மணக்க
என்னுளும் பூசங்க ராக மிரக்கும னேநதிழையே. (181)

### பாங்கி தன்நாட் டணியியல் சாற்றல்

கோடலுஞ் செச்சையும் பூண்டோன மயிலைக் குமரன்விண்ணோர்
தேடலுங் கொணடருள சிங்கார வேலன் சிலம்பணணலே
ஆடலுங் காமரம பாடலுங் காமர மார்குழன்மேல்
சூடலுங் காமரம் காலிசைந் தார்வரைத் தோகையர்க்கே. (182)

### இறைவிக்கு இறையோன் குறி அறிவுறுத்தல்

விழைவார் மயிலையிற சிங்கார வேலர் வியனசிலமபா
மழைவாய் பிலிற்றுக கருமுகில் சூழ்வரை மாலிருள்வாய்
புழைவாய் நெடுங்கை மதம்பதம் பார்த்துப புலிஇடக்கும்
நுழைவா யதரிடைச் செல்வான் விரும்பினர் நுண்ணிடையே. (183)

**நேராது இறைவி நெஞ்சொடு கிளத்தல்**

மணியுந் தருவு மனையான மயிலையின் மான்மதச்சாந்-
தணியும் புயாசலன் சிங்கார வேலனைவெற் பண்ணலைநாம்
பணியுங் களிறும் புலியும் வலிசெய் படரிருட்கான
துணியுந தரயல்ல வேநெஞ்ச மேவரச் சொல்லுதற்கே. (184)

**நேரிழை பாங்கியொடு நேர்ந்துரைத்தல்**

பாமேல் விரும்பிய சிங்கார வேலா பரிந்துறையும்
பூமே லுயாந்த மயிலா புரிமன்னர் புததியெல்லாம்
தாமே யறிபவர் காணி லிராவிற் றனிததுவரல
ஆமே யெனிலினி நாமேது சொல்லுவ தாயிழையே. (185)

**நேர்ந்தமை பாங்கி நெடுந்தகைக் குரைத்தல்**

வனனக் கரும்பு விரும்பிய சாலி வளாமயிலை
என்னப்ப னுகிய சிங்கார வேலனை யேத்துமன்னு
முனனிப் புகன்ற படிசெய்க யாமத்து முந்திமட
அனனத்தை யானிரந் தேனகளை தீர வளிககவென்றே. (186)

**பாங்கி தலைவனைக் குறியிடம் நிறீஇத் தாய்துயி லறிதல்**

கொண்டலை யூரிந திரபோக மனபர் கொளக்கடல்சூழ்
மண்டலை மேனல்கு சிங்கார வேலர் மயிலைவெற்பில
வணடலை தணடலை வண்டலை யூசலை மாலகளிறு
கண்டலை வாக்கு மணங்கே செறிநதவிக கங்குலிலே. (187)

**இறைவிக்கு இறையோன் வரவறிவுறுத்தல்**

நாலா ரணம்புகழ் சிங்கார வேலவர் நானமுகனும்
மாலா னவனும் பணிமயி லாபுரி மாம்பொழில்வாய்க்
காலா லுகாதுசெங் கையாற் கனிகள் கயததிலுக
மேலான வோசை செவிப்படு மாலென விளங்கிழையே. (188)

**குறியிடத்து இறைவியைக் கொண்டு சேறல்**

தோமேழ் பிறவி தொடக்கறு மாதவத தொண்டருள்ளப்
பூமே லினிதுறை சிங்கார வேலவா பொனமயிலை
நாமே வமுத மதிமுதத முச்சியி னும்வளர்த்த
காமே லுறைவது காணச்செல் வாமதிக் கார்மயிலே. (189)

**குறியிடத்து உய்த்தல்**

செய்க்கும் பொழிற்குந் திருமகன் வாளி செறிமயிலை
மெய்க்குஞ் சரமிவர் சிங்கார வேலர் வியனகிரிமேல்
கைக்குங் கருங்க ணிணைக்கு நகைக்குங் கருதுவமை
வைக்குஞ செழுமலா போய்க்கொணர் வேனில்லு வானுதலே.
(190)

### தலைவன் குறியிடத்து எதிர்ப்படுதல்

சக்லோகம் போற்றிய சிங்கார வேலர் தமிழ்மயிலை
பகலோன கரக்கு முனமே வெளியிற் படர்ந்தனையோ
நகலோங் கலரிக்குந் தாமரைப் பூவிற்கு நணபிலையோ
புகலோங் கிரவிற் றனிவந்த வாறென்ன பூந்திருவே. (191)

### தலைவி நெறியின்து அருமை நினைந்து இரங்கல்

வைத்தடி பேர்க்க வழியறி யாத மயங்கிருளில்
பத்தனை திக்கும் படர்மழை தூற்றவெம் டைங்குடிவாய்
எத்தனை யெண்ணங்கொண் டெவ்வாறு வந்தனை யோர்மயிலை
உத்தமர் போற்றிய சிங்கார வேல னுயர்வரைக்கே. (192)

### தலைவன் தலைவியைத் தேற்றல்

துன்னு மணிப்புயன் சிங்கார வேலன் சூழ்நிதியம்
மன்னு மயிலை யுறுவேனை நாகம் வலிவதின்றே
உனனும் வெங்காமக் கனலோனைக் கங்கு லொறுப்பதின்றே
இனனலிங் கேது சுகமே யுனைப்பெற்ற வென்றனக்கே. (193)

### புணர்ச்சியின் மகிழ்தல்

மோகந் தரும்படை யால்வீர வாகு முதலியர்க்காம்
சோகந் தவிர்த்தருள் சிங்கார வேலவர் தொன்மயிலை
ஏகன் பரம னிறைவியைத் தன்பா லிசைந்துநங்காய்
போகந் தழையத் தழுவிநம் போலப் புணர்ந்திலனே. (194)

### புகழ்தல்

இணக்கு தரும்பகட் டேறி மனமென்ன விசைமயிலைக்
குணக்குன்ற மாகிய சிங்கார வேலர்க் குவட்டணங்கே
மணக்கும் பொழுதம் புயமவ ராகி மணந்துசற்றே
தணக்கும் பொழுதவ் வரும்பா முனது தனதடமே. (195)

### தலைவனைத் தலைவி கங்குல்வரல் விலக்கல்

ஆளியுங் கூளி யணங்கும் பிணங்கு மரையிருள்வாய்
வாளியின் பினசெலுங் கானயாறு நீந்தி மருவலிங்ஙன்
மீளியந் தோளணணல் வாரல கழனி விளைமயிலை
வேளிளங் கோளரி சிங்கார வேலர் வியனகிரிக்கே. (196)

### தலைவன் தலைவியை இவ்வயின் விடுதல்

நல்லருள் செய்பவர் சிங்கார வேலர் நவமயிலை
முல்லையு நெய்தலுங் கொய்யே றனித்தினி முன்பெனவே
சில்லொலி நூபுரஞ் செய்யாது சீறடி செப்பநடந்
தில்வயி னெய்தி யணைமேற் றுயினறரு ளேந்திழையே. (197)

### தலைவியை எய்திப் பாங்கி கையுறை காட்டல்

விட்டுப் பிரிந்தன னென்றே மனத்து வெருவன்முன்னே
மட்டுப் படாநின குழற்கா மலர்கொய்து வந்தனனயான்
எட்டுத் திசையும் புகழு மயிலைய னெணகணனைக்
குட்டிச் செயங்கொண்ட சிங்கார வேலன் குலவ்ரைகக்கே. (198)

### பாங்கி தலைவியை இற்கொண்டு ஏகல்

மறப்பார் தமையுண் மறப்பா னினைப்பன் மறப்பிலரைச்
சிறப்பார் மயிலையிற் சிங்கார வேலன் றிருமலைமேல்
புறப்பா லிரவிற் பயிற லடாதுநம் பொன்மனையின்
உறற்பா லதுகண் விழிக்குமுன் னேயன்னை யொண்ணுதலே.

(199)

### பாங்கி இறைவனை வரவு விலக்கல்

அரையாமம் வெம்புலிக கான்கடந் தேகி யலைபுரட்டும்
நுரையாறு நீந்தி மலையேறி யெம்மனை நோக்கிமன்ன
வரையாது நீவர லொல்லாது நல்ல மயிலைவளர்
உரையாதி நலகிய சிஙகார வேல ருயாகிரிக்கே. (200)

### தலைவன் மயங்கல்

திருவாய்க் கெதிரிலை யென்றே மடந்தை திகைக்கவென்னை
மருவா மொழிபல பேசினை யாயினும் வல்லிதந்த
ஒருவாப் பிணிக்கிங் குரைமருந் தேதுண் டுயர்மயிலை
வருவா னவருட் சிங்கார வேலவன் மால்வரைக்கே. (201)

### தோழி தலைமகள் துயர்களைந்து விடுத்தல்

அன்னப் பெடைசினை யென்னச் சசியுடு வார்மயிலை
முனைப் பரம்பொருள சிங்கார வேலவர் மொய்வரைமேல்
மன்னர்க்கு மனைவ நீசெலல் மாநகர் வாயிசைக்கும்
சின்னத் தொனியிற் பெருந்துயர் போமெங்கள் சேயிழையே. (202)

### திருமகட் புணர்ந்தவன் சேறல்

கொங்கைக் களிற்றொடுங் கூந்த லிராவொடுங் கோடுமிடைச்
சிங்கத் தொடும்பயில் வேனிருங் கான்வழிச் சேறலஞ்சேன்
துங்கத் திருநகர்க கேக லெளிது சுடர்மயிலைச்
செங்கைப் பதுமத்தன் சிங்கார வேலன் சிலம்பணங்கே. (203)

இரவுக்குறி முற்றிற்று.

# இரவுக்குறி இடையீடு.

## இறைவிக்கு இகுளை இறைவரவு உணர்த்தல்

பலவும் வகுளமுஞ் சூதமும் பூகமும் பாடலமும்
குலவு மயிலையிற் சிங்கார வேலர் குவட்டணங்கே
மலரு மலர்ப்புன்னைச் சேக்கையி லோதிமம் வானிரவு
புலரும் பொழுதன்றி முற்று மிரங்கின போந்ததெனனே. (204)

## தலைவி குறிமருண்டமை பாங்கிக்கு உணர்த்தல்

முருகா குமர குருநாத நீதி முகுந்தனுக்கு
மருகாவென் பாரக்கருள் சிங்கார வேலர் மயிலைமின்னே
குருகா வொலிமனைர் தேர்மணிக் குரலெனக் கொண்டுகொணடு
அருகார் பொழிற்கங்குல் சென்றுசென் றேய்ந்த வடியிணையே(205)

## பாங்கி தலைவன் தீங்கெடுத்து இயம்பல்

கரம்பல நீண்ட சிரம்பல சேர்சிங் கனையடுவச்
சிரம்பயில் செங்கையன் சிங்கார வேலவன் றிண்கிரிமல
பரம்பரை யினறிப் படித்தோன் பொருளெனப் பாஙகுபடா
மரம்பயில் புட்குறி செய்தான் மலையு மதமன்னனே. (206)

## புலந்தவன் போதல்

மாதைப் புணர்புயன் சிங்கார வேலன் மயிலைவெற்பில்
பேதைப் புணர்ச்சியை வேண்டினர்க் கல்லல் பெருகுமெனும்
காதைக்கு நானொரு வேன்காட்சி யாயினன கண்டவிருள்
போதைத் துரந்து விழிகண்டா லொன்றும் புதுமையதே. (207)

## புலந்தபின் வறுங்களம் தலைவிகண் டிரங்கல்

மன்னுண்மைச் சூரர்க்கு முன்னுளைப் போரின் மகுடபங்கம்
தன்னுண்மை யாற்செய்த சிங்கார வேலவன் றண்மயிலை
புன்னக மேகைதை யேகங்குல யானவந்து போனபின்னர்
என்னுகஞ் சேரனபர் வந்தன ரோவிங் கியமபுகவே. (208)

## தலைவி தன்துணைக் குரைத்தல்

ஆழியின மாவை யயில்கொண்டு கீறி லடன்மயிலும்
கோழியு மாகச்செய் சிங்கார வேலா குலமயிலைத்
தோழி நமதிடத் தன்புமுன் போலுந் தொடர்பிலையோ
வாழி மலர்ப்பொழிற் செய்குறி தப்பினா மன்னவரே. (209)

## தலைமகள் அவலம் பாங்கி தணித்தல்

வருசாதி நான்கின் முறைநாளு மோங்கு மயிலை யுள்ளோன்
தருசாதி வெற்பினன சிங்கார வேலவன் றண்ணளிபோல்
ஒருசாதி வங்கிச மேல்கி மேவலி னெண்டொடிகா
மருசாதி சூழ்வனத் தெய்தினர் போலுநம் மன்னவரே. (210)

